VOL. LXXVI. No. 9. SEPTEMBER 1939.

# அருணோதயம்

# ARUNODAYAM

THE

TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Leipzig Evang. Lutheran Mission, Church of Sweden Mission, the Tamil Evang. Lutheran Church and the Danish Mission

உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக
யோவான் 14: 1

பொருள் அட்டவணை. பக்கம்.



PRINTED AT
JEGAM & CO., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1939

## பொன்னகர்ப் பிரவேசம்

எனது அருமை ஏக புதல்வியும், விழுப்புரம் மிஷன் ஸ்கூல் உபாத்தியாயர் தானியேல் ஆசீர்வாதம் பிள்ளையின் மனைவியுமான தங்கமணியம்மாள் விழுப்புரம் ஆஸ்பத்திரியில் பிரசவமாகி, பிறகு ஜுரம் கண்டு கொஞ்சம் சுகமாகி வீட்டுக்கு வந்து, மறுபடியும் சுகவீனமாகி எவ்வித சிகிச்சையாலும் சுகமாகாமல் ஜுலைமீ 11உ மாலை பரமபதம் சேர்ந்து, மறுநாள் கனம் S. சாலமோன் ஐயரவர்களால் நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 26.

S. தானியேல் ஆசீர்வாதம். K. சாமுவேல் பிள்ளை,
S. ராஜையா. *Rtd. Hd. Master, Villupuram.*

---

## மரண அறிக்கை

எனது அருமை மருமகனும் மாஜி N. இராயப்ப உபதேசியாரின் குமாரனும் சென்னை R. பாக்கியராஜ் ரைட்டரின் சகோதரனுமான Mr. R. G. சிகாமணி, மதுரை U. C. High School உபாத்தியாயர் அவர்கள் 29—7—39ல் எதிர்பாராத விதமாய் Cerebral Haemorrhage வியாதியால் பீடிக்கப்பட்டு 30-7-39 மாலை 6-30 மணிக்கு "God is Great" என்ற வாசகத்தை மும்முறை சொன்ன சில நிமிஷத்திற்குள் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார். மறுநாள் மாலை 4-30 மணிக்கு துக்க வீட்டில் ஜெபம் செய்தபின் அவரது சடலம் C. S. M. & S. P. G. Choir பாடலுடன் திரளான கிறிஸ்தவர்கள், இந்துக்கள், பள்ளிப்பிள்ளைகள் புடைசூழ இரட்சணிய தெய்வாலயத்துக்குக் கொண்டுபோகப்பட்டு சங்: M. தானியேல் ஐயர் அவர்கள் பிலிப்பியர் 1: 21ன் பேரில் ஆறுதலான துக்கப் பிரசங்கம் செய்தபின் நமது கல்லறைத் தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று க்ஷேமிக்கப்பட்டார்.

இவர் கிரம்மர்புரம் Y. M. C. A இல் முதல் செக்ரெட்டரியாகவும் நமது மிஸியோன் பாடசாலைகளில் மதுரை, பாண்டூர் என்ற இடங்களிலும் பயனுற உழைத்தவர். மதுரை ஜில்லா, சர்க்கார் சம்பந்தமான விஷயங்களில் செஷன் கோர்ட்டில் அசெஸ்சராகவும், கள்ளர் சீர்திருத்தக் கமிட்டி மெம்பராகவும், ஏழைகள், கஷ்டப்படுகிறவர்கள் யாவருக்கும் பேர் உபகாரியாக இருந்தவர். இவரது அடக்கச் சமயத்தில் நிறைந்திருந்த திரள் கூட்டமே இதற்குப் போர்ந்த சான்றாகும்.

இவர் பின்வைத்துப்போன மனைவிக்கும் ஒரே மகளுக்கும் பெந்துக்கள் யாவருக்கும் துக்கத்துக்குள்ளான அனைவருக்கும் ஆறுதல் அமலன் அருள ஜெபிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். வயது 46.

சங்கீதம் 90·12. S. Kirubai Gnanadickam, *Teacher.*

துக்கத்துக்குள்ளான எங்களைத் தந்தி கடிதங்கள் மூலமாயும் நேரிலும் ஆறுதல்படுத்தின அனைவருக்கும் எங்கள் நன்றியைச் செலுத்துகிறோம்




தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை
Edited by Rev. S. GNANAMANICKAM, Rev. P. GÆBLER
& Mr. G. T. WILLIAMS, B. A., L. T.

No. 9 | செப்டெம்பர் | 1939

+

**சங். அ. அடைக்கலம் ஐயர்**

மரணம் :—11—8—1939

வயது : 33

## தியானம்

மனுஷ குமாரனைப்பற்றித் தீர்க்கதரிசிகள் எழுதியவைகளெல்லாம் நிறைவேறும் என்றார்.........அவர் சொன்னவைகளை அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. லூக். 18 : 31. 34.

சொல்லி முடியாத கஷ்டங்களை அனுபவிப்பதற்கே கடவுள் இயேசு கிறிஸ்துவை இவ்வுலகத்திற்கு அனுப்பினதாகத் தெரிகிறது. தாம் பாடுபட்டு மரிப்பதைப் பார்ப்பதற்கு இயேசு கிறிஸ்து தமது சீஷரை அழைக்கிறார். அவர்கள் உள்ளங்கள் துக்கத்தால் வழிந்தோடக்கூடிய இடத்துக்கு அவர்களைக் கூட்டிக்கொண்டு போனார். எந்தப் பக்கத்தில் பார்த்தாலும் இயேசு கிறிஸ்துவின் ஜீவியமும் ஊழியமும் வியர்த்தமானதாகத் தோன்

றிற்று. மனுஷப் பார்வையில் தோல்வியாகத் தோன்றியது கடவுளின் பார்வையில் பூரண ஜெயமாகத் தோன்றிற்று. ஏனென்றால் கடவுளின் நோக்கம் மனுஷ நோக்கத்திற்கு முற்றிலும் வேறானது.

நமது புத்திக்கு விளங்காத கடவுளின் அழைப்பை நமது ஜீவியத்திலும் பெற்றுக்கொள்ளுகிறோம். அதை அவர் நமக்குத் தெளிவாக விவரித்துச் சொல்லாமல் எதிர்ப்பேச்சில்லாத நமது கீழ்ப்படிதலையே எதிர்பார்க்கிறார். சமுத்திரத்தின் முழக்கம் போலிருக்கிறது கடவுளின் அழைப்பு. சமுத்திரத்தின் தன்மையுடையவர்களே இதைத் தங்கள் உள்ளத்தில் கேட்டுணரக்கூடும். கடவுளின் நோக்கத்தை நிறைவேற்ற அவருக்குக் கூட்டாளிகளாயிருக்க வேண்டியவர்கள் ஏற்கனவே இதைப் பற்றித் திட்டமாயறிந்து கொள்ளுதல் அசாத்தியம். தாம் செய்வது இன்னதென்று கடவுளுக்குத் தெரியுமென்று நம்புவதே விசுவாசியின் அறிகுறி. நடக்கும் விஷயங்கள் தற்செயலாயல்ல, கடவுளின் திருவுளப்படியே நடக்கின்றன. தமது நோக்கங்களைக் கடவுள் நிறைவேற்றிக்கொண்டே வருகிறார்.

நாம் கடவுளின் ஐக்கியத்திலிருந்து, அவர் தமது நோக்கங்களை நிறைவேற்ற நம்மையும் உபயோகிக்கிறாரென்பதை அறிந்துணருவோமானால் அவருடைய நோக்கங்களை ஆராய்ந்தறியப் பிரயாசப்படுவதை விட்டுவிடுவோம். கிறிஸ்தவ ஜீவியத்தில் நாம் எவ்வளவுக்கு முன்னேறுகிறோமோ, அவ்வளவுக்குக் காரியங்கள் லேசாகின்றன. 'கடவுள் ஏன் இக்காரியத்திற்கு இடங்கொடுத்தார்' என்று கேட்கும் போக்கு அப்போது குறைந்து விடுகிறது. கடவுளின் வல்லமையான கரம் எல்லாவற்றையும் ஆண்டு நடத்திவருகிறது. தன் சொந்த யோசனைகளையல்ல, கடவுளின் யோசனையையும் ஞானமுள்ள நடத்துதலையும் நம்புகிறவனே கிறிஸ்தவன். கடவுளின் பிள்ளைகள் தங்கள் சொந்த நோக்கங்களைத் தங்கள் ஜீவியத்திற்கு அடிப்படையாகக் கொள்ளாமல், தேவ வார்த்தையையும், நடத்துதலையுமே கவனித்து நடப்பார்கள்.

நமது ஜீவியத்தில் இயேசு நம்மோடு பேசுவதைக் கவனித்துக் கேட்கிறோமா? அவருடைய நடத்துதலுக்கு எதிர்ப்பேச்சின்றிக் கீழ்ப்படிகிறோமா? அவருடைய நடத்துதல் நம்மைத் தோல்விக்கல்ல, வெற்றிக்கே கொண்டுபோய்ச் சேர்க்குமென்கிற நிச்சயம் நமக்குண்டா?

*அவரைப்பின் செல்வோமாக—சிலுவையின் தோழரே;*
*அவரைப்புகழ்ச்சியாக—தோத்திரிப்போம், கோவிலே.*

———:———



## பத்திராதிபர் குறிப்புகள்

நமது சகோதரன் சங். A. அடைக்கலம் ஐயரின் அகால மரணம் அவரை அறிந்த அனைவரையும் திடுக்கிடச் செய்தது. அவர் ஈரோட்டில் பென்ஷன் பெற்று நமது சபை சம்பந்தமாக இன்னும் உற்சாகமாய் உழைத்துவரும் அருளானந்தம் உபதேசியாரின் கனிஷ்ட குமாரன். சென்னை "குருக்குழு" வேத சாஸ்திர வகுப்பில் பயின்று புதுக்கோட்டையில் பிரசங்கியாராயிருக்கையில் 1932ம் ஆண்டு மே மீ" கோயமுத்தூரிலிருக்கும் ஸ்ரீமான் R. டேவிட் பிள்ளை (தற்கால C. C. காரியதரிசி) யின் குமாரத்தியை விவாகம் செய்தார். 1934ம் ஆண்டு ஏப்ரல் மீ" குருப்பட்டம் பெற்றார். திண்டுக்கல், முதுகுளத்தூர், திருப்பத்தூர், பெரம்பலூர் முதலிய இடங்களில் ஊக்கமாய் உழைத்து, பொள்ளாச்சிக்கு மாற்றப்பட்ட சிறிது காலத்தில் இருதய வியாதியால் பீடிக்கப்பட்டு எவ்வித சிகிச்சை செய்தும் குணமாகாமல் கோயமுத்தூரில் தனது மாமனார் வீட்டில் மரித்து, கிறிஸ்துநாதர் ஆலயத்தில் துக்க ஆராதனை நடந்தபின் நமது உத்தான தோட்டத்தில் க்ஷேமிக்கப்பட்டார். அவர் 3 பிள்ளைகளைப் பின் வைத்துப்போகிறார். துக்கத்துக்குள்ளான யாவரையும் ஆண்டவர் ஆற்றித்தேற்றுவாராக.

செப்டெம்பர் மீ" 7ம் தேதியில் தகப்பன் சங். S. Zehme சாஸ்திரியார் நமது 75ம் வயதைப் பூர்த்தி செய்கையில் அவருக்குத் தமிழ் சபையின் மனப்பூர்வமான மினவுதல்களை அனுப்புகிறோம். ஆண்டவர் அவருக்குச் சுகமும் சந்தோஷமும் நிறைந்த அநேக வருஷங்களை இன்னுமளித்து தமிழ் சபையின் நன்மைக்காக ஜெபிக்கும் ஊழியத்தில் நிலைக்கத் துணை செய்வாராக.

ஜெர்மனியில் நமது மிசியோன் சம்பந்தமாக இன்னும் தொண்டுபுரிந்து வரும் சங். R. Froelich சாஸ்திரியாரிடமிருந்து வந்த கடிதத்திலடங்கிய பின்வரும் செய்தியை நமது சபையாருக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்:— "என் எண்ணங்கள் தினந்தோறும் இந்தியாவிலும் அதின் சபையிலுமிருக்கின்றன. இந்தியாவிலும், ஜெர்மனியிலுமுள்ள சபைகளைப்பற்றிய என்பயம் நிறைந்த கவலையைப்பற்றிக் குறிப்பாய்ச்சொல்லப் பிரயாசப்பட்டிருக்கிறேன். அது முற்றிலும் 1ம் கற்பனையையும், சங்கீதம் 81:13ஐயும், சிலுவையையும், மெய்யான ஜெபத்தையும் பற்றியவைதான். பராபரனுக்கு ஸ்தோத்திரம்.–R. Froelich."

பாண்டூர் வட்டசபை பஞ்சக் கொடுமையால் கஷ்டத்திற்குள்ளாயிருப்பதைக் குறித்து ஆலோசனைச் சங்கத் தலைவர்

நமது சபைகளுக்கனுப்பியிருக்கும் சுற்றுக்கடிதம் நம்மெல்லாரையும் அனுதாபத்துடன் உதவிசெய்ய ஏவிவிடவேண்டும். பள்ளிக்கூடப் பிள்ளைகள் பசிக் களையினால் மயக்கமடித்து விழுவது பரிதாபம். ஒவ்வொருவரும் கொஞ்சம் கொஞ்சமாய்க் கொடுத்தாலும் அது ஆபத்திற்குதவும் பேருதவியாகும்.

**மதிப்புரை** :—எசாயா: அக்காலத்துச் சரித்திரமும் உபதேசமும் (Isaiah: The Prophet, His times & teaching, by Witney, C. L. S. Expository Series.) 290 பக்கங்களுள்ள இவ்வரிய நூலை Witney ஐயர் தெளிவான தமிழில் எழுத, C. L. S. அதை அச்சியற்றிப் பிரசுரித்ததற்காகத் தமிழ்ச்சபை அன்னவர்க்கு மிக்க நன்றி செலுத்தக் கடமைப்பட்டது. வேத விஸ்தரிப்பு நூற்கள் தமிழில் அதிகமில்லாதிருக்கும்போது எசாயா தீர்க்கதரிசியின் வார்த்தைகளைச் சரியான சரித்திர சம்பந்தமாக வைத்து அவைகளின்பேரில் வியாக்கியானம் செய்யும் நோக்கத்துடன் வெளிப்பட்டிருக்கும் இந்நூலை நாம் சந்தோஷத்துடன் வரவேற்கிறோம். தற்கால சாஸ்திர ஆராய்ச்சிகளை அனுசரித்தே இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. விலை அணு 12 தான். எசாயா தீர்க்கதரிசன ஆகமத்தை இவ்வியாக்கின நூலின் உதவி பெற்று வாசிப்போர் அதிலுள்ள பொருளைத் திட்டமாயறிந்துகொள்ள ஏதுவாகும்.

———:———

## புதுப்பாட்டு

கர்த்தருக்கு ஒரு புதுப்பாட்டைப் பாடுங்கள்; ஏனெனில் அவர் அதிசயங்களைச் செய்கிறார். சங்: 99, 1. அதிசயமும் பாடலும் இணைந்திருக்கும். அதிசயமே பாடலைப் பிறப்பிக்கும். மறைவான ஆழத்திலிருந்து கிளம்புகிற பாடலே அதிசயமாகும்; செம்மையான பாட்டு உண்டாக்கப்படாது, யோசித்து வராது, உள்ளத்திலிருந்து அளிக்கப்படும். பரமபனி ஆத்துமாவின்பேரில் இறங்கி அதைச் செழிப்பாக்கும். இயற்கையிலும் சரித்திரத்திலும் ஜாதிகளின் முன்னேற்றத்திலும் நமது சொந்த ஜீவியத்திலும் தேவனுடைய அதிசயம் சிறந்து விளங்கும்போது: கீதங்களே, என் சுரமண்டலமே போற்ற விழிப்பீர்களாக என்று சொல்லி தங்கள் கின்னரங்களையும் வாத்தியக் கருவிகளையும் எடுத்து வாசிப்பார் பலர்.

தேவனுடைய மகத்துவ செயலைக் குறித்துப் பாடிய மோசே முதல் அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியின் மகிமைக்கென்று மீட்கப்பட்டவர்கள் பாடும் பாடல்மட்டும் எத்தனையோ பாட்டுகள் பரிசுத்த வேதத்தில் நிறைந்திருக்கும். சத்திய வேதம் அதிசய புத்தகமாதலால் பாட்டுகள் நிறைந்த புத்தகம்.



அதன் ஒரு சிறிய பங்காகிய சங்கீத புத்தகம் அதிபூர்வமானதும் மகா அருமையானதுமான 150 பாடல்கள் அடங்கியது; பூர்வீகமானவையாயிருந்தும் எத்தனையோ மனுஷரின் ஜீவியத்தில் இன்றைக்கும் வரும் சுகதுக்கங்களுக்கு மிகவும் பொருந்தியவையாகும்.

அதிசயத்திலெல்லாம் அதிசயம் ஆண்டவராகிய இயேசுவே. இப்பூமியில் அவர் இறங்கினதும் மானிடர் நடுவில் பிழைத்ததும் தமது சத்துருக்களுக்காக மரித்ததும் அதிசயமே. இதை நான் உணர்ந்தறியப் பார்க்கையில் என் ஆவி பக்தி வினயமாய் அமர்ந்து நிற்கவேண்டியது. அவர் முன்னணையைச் சூழ தேவதூதரும் மனுஷரும் துதித்துப் புகழுகிறார்கள். அவருடைய சிலுவையின்பேரிலே கட்டப்பட்டிருக்கும் கவிகள் அதி உன்னதமானவை. அன்பும் வல்லமையும் நிறைந்த மனுஷ குமாரன் பேரில் பாடப்பட்டிருக்கும் கவிகள் எல்லாம்: கர்த்தருக்குப் புதுப் பாட்டைப் பாடுங்கள், ஏனெனில் அவர் அதிசயங்களைச் செய்கிறார் என்றே சொல்லும்.

ஒரு ஜாதி உயிர்ப்பிக்கப்படும்போதும், ஒரு புதிய விசுவாச ஜீவியம் எழும்பும்போதும், அவர் மனிதரைத் தமது அன்பால் தொட்டு தமது ஆவியின் ஸ்நானம் தரும்போதும், ஒரு மனிதன் எழுந்து தன் தகப்பனண்டை போகும் அதிசயம் நிறைவேறும்போதும், கிறிஸ்து ஒரு உள்ளத்தில் பிறந்து புதிய சிருஷ்டிப்பு நடக்கும்போதும் எண்ணிறந்த ஞானப் பாட்டுகள் எழுதப்படும்; கீத வாத்தியங்கள் வாசிக்கப்படும்; மௌனமாயிருக்கவே முடியாது; விடியற்காலத்தின் பனிக்குச் சமானமாய் ஞான கீதங்கள் உற்பத்தியாகும். அவ்வாறே சீர்திருத்தலின் காலம் எட்டே பாட்டுகளோடு துவக்கி எண்ணிறந்த பாட்டுகளாக வளர்ந்தது. நமது திருச்சபையின் உச்சித பொக்கிஷம் நமது ஞானப்பாட்டு புத்தகமே. ஜெர்மனியருக்குள் பரிசுத்த வேதம் அவர்களின் பலமாகவும் ஆறுதலாகவும், உயிராகவும் உபயோகப்பட்டதைப் பார்க்கிலும் பெரிதான வேலை செய்தது அருமையான ஞானப்பாட்டுகளே. சீர்திருத்தலின் வேலை இந்தப் பாட்டுகளாலேயே உள்ளங்களில் நடந்தேறியிருக்கிறது. சுவிசேடப் பாடல்கள் ஒரு ஜாதியில் ஒழிந்துபோமானால், அவர் விசுவாசமும் ஒழிந்துபோம் என்ற பயமுண்டு. 'உன் நெஞ்சிலே உண்டான' 'கர்த்தர்தான் எங்கள் துர்க்கமும்' 'களித்துப்பாடு' 'கர்த்தாவைப் போற்றிப் பாடு, என் ஆவியே என் உள்ளமே' இது முதலான ஞானப்பாட்டுகள் நமக்கு உண்டு. தேவனுடைய அதிசய நடத்துதலை உணராத இருதயமும் கண்களும் உள்ள கிறிஸ்தவர்களின் நடுவே இப்பாட்டுகள் தொனிக்க இடம் இல்லை.

'பவுல் கோன்ராத்'

———:———

A

# ஞானப்பாட்டு ஆராய்ச்சி

" இம்மட்டும் ஜீவன் தந்த கர்த்தாவை "

I

இயற்றியவர் : பவுல் கேரார்ட் என்னும் லூத்தரன் பக்தர். இவர் 17ம் நூற்றாண்டில் ஜெர்மனியில் வாழ்ந்த கவிராயர். நமது பப்ரீசியுஸ் ஞானப்பாட்டில் இவர் பாடின பாடல்களே மற்றோருடைய பாடல்களைக் காட்டிலும் அதிகமானவை. உதாரணமாக: 51, 71, 111, 115 ஆ இவர் வாழ்ந்தகாலத்தில் ஐரோப்பா முப்பது வருஷ யுத்தத்தால் நெருக்கப்பட்டிருந்தது. அக்காலத்திலிருந்த தேச குழப்பங்களும், திருச்சபைக்கு வந்த மோசங்களும் தனி ஆத்துமாக்களின் சஞ்சலமும், பக்தரின் ஜெபதப விரத சீலங்களும் இவரது இப்பாடலில் பிரதிபிம்பிப்பதைக் காணலாகும்.

மொழிபெயர்த்தவர் : பப்ரீசியுஸ் ஐயர். ஜெர்மன் திருச்சபையின் பக்திப் புதையலைத் தோண்டி எடுத்து, கல்லையும் மண்ணையும் தங்கத்தினின்று வேறுபடுத்திப் புதுக்கி மெருகொடுத்துத் தமிழர் அணியுமாபரணமாகச் செய்துகொடுத்த ஏராளமான அணிகலன்களில் "இம்மட்டும் ஜீவன் தந்த" என்ற பாடல் மிகச் சிறந்தது. இம்மொழிபெயர்ப்பை ஜர்மன் பாடலோடு ஒப்பிட்டு ஆராய்ச்சிசெய்யும்பொழுது பல நயங்கள் புலனாகின்றன.

ஒவ்வொரு வார்த்தைக்கும் நேரிட்ட பத அர்த்தங்கொடாமல் (Literal translation) மூல அர்த்தத்தைத் தம் இருதயத்தில் உணர்ந்து தமிழர் மனதிலும் இருதயத்திலும் பசுமரத்தாணிபோல் ஊன்றிநிற்குமாறு, மூல பொருட் சுவையை தமிழில் சொற்சுவை குன்றாது இயற்றியுள்ளார். இடையிடையே மூலபாடலில் இல்லாத கருத்துக்களையும் தமிழர் மனம் உருகுமாறு செறிந்துவைத்துள்ளார். "அத்தியந்த பணிவோடுண்மையாக" என்பது ஜர்மன் பாடலில் கிடையாது. "நாள் பேச்சைப்போல் கழியும்" என்று துவக்கும் கவி பப்ரீசியுசின் கற்பனையாகும். இப்பொருளும் சொல்லும் உவமானமும் தமிழருக்கு எத்துணை இயல்புடைத்து என்பதை இன்னொரு விதத்திலும் காணலாகும். வேதநாயகம் சாஸ்திரியார் இந்த ஞானப்பாட்டை ஒரு தமிழ்க் கீர்த்தனையாக மாற்றிப் பாடி மேற்சொன்ன உவமானங்களைப் பிறவற்றோடு சேர்த்துப் பாடியது பாராட்டத்தக்கது.



" காலம் சொல்போல் கழியும், தண்ணீரைப்போல் கழியும்,
கனவைப்போலேயும் ஒழியும் ;
வாலிபமும் மறையும், சீலமெல்லாம் குறையும்,
மண்ணின் வாழ்வொன்றும் நிற்கமாட்டாது ;
கோலப்பதுமைக்கும் நீர்க்குமிழிக்கும் புகைக்குமே......"

கேரார்ட்டின் கருத்தை முற்றிலும் உணர்ந்து தமிழர் உள்ளத்தில் பல்லாயிர ஆண்டுகளாக அழுந்திக்கிடந்த இரண்டொரு வீணைக்கம்பிகளை "நாள் பேச்சைப்போல் கழியும், தண்ணீரைப்போல் வடியும்" என்ற விரலால் மீட்டவே இனிய நாதம் பிறந்து விட்டது. இச் "சொல் மந்திரம்" பப்ரீசியுசின் வரமே.

4ம் கவியில் ஜர்மன் கவியின் அர்த்தத்தைத் தம் சொந்த வார்த்தைகளில் சொல்லுகிறார். கவலை, வியாதி, இக்கட்டு திகில் மட்டுமல்ல. யுத்தம், நாடு முழுவதையும் வளைந்து கொண்ட பெரிய சேனைகளையும் பழைய வருஷத்தில் கடந்து புது வருஷத்துக்குட்பட்டோம் என்பது கேரார்டின் கருத்து. இதிலிருந்து இப்பாடல் சந்தர்ப்பத்தை யூகிக்கலாம். இது ஒரு யுத்த காலம். 4ம் 5ம் கவிகளில் இரு அழகிய ஓவியங்கள் வரையப்பட்டிருக்கின்றன. அவ்வார்த்தைகளை அந்வயப்படுத்தி வாசித்தால் அர்த்தம் தெளிவாகும். "தன்னுளில் இரட்சகரின் காலில் விழுந்தண்ணார்ந்து பார்க்கும் சன்மார்க்கரை இரட்சகரின் கை தற்காக்கும்" என்று வாசிக்கவும். காற்று, இடி, மழை, மின்னலில் சிறு குழந்தை பயந்து அலமலந்து அன்னையிடம் ஓடும்பொழுது, தாய் இருகரங்களை விரித்துக் குழந்தையை அணைத்து, முந்தானையால் மூடி, "அழாதே, கண்ணே! பயப்படாதே அம்மா" என்று சொல்லுங் காட்சியொன்று. பெரும் யுத்தம், பக்தரின் பரிதவிப்பு, செபத்தில் கர்த்தரண்டை ஓடுதல், முழங்காலில் இருந்து பிறகு சாஷ்டாங்க நமஸ்காரம். கூக்குரலான செபங் கேட்கப்பட்டது. இயேசுவின் திருக்கோலக் காட்சி. தரையில் விழுந்துகிடந்த பக்தன் தலை நிமிர்த்தி இயேசுவின் முகத்தைப் பார்க்கிறான். இயேசுவின் இருகரங்களும் தன்மேல் விரிக்கப்பட்டுள்ளன. அவரது குளிர்ந்த திருமுகம் தன்மேல் ஏறெடுக்கப்பட்டிருக்கிறது. தாயின் மடியின் இருக்கும் குழந்தை பயமற்றிருப்பதைப் போலும் இயேசுவின் அபய வரதாஸ்தத்தைக் கண்ணுற்ற பக்தனும் நிர்ப்பயமாயிருக்கிறான்.

தற்காக்கும். (1) பார்க்கும் என்னும் கடை இயைபிற்குப் பொருத்தமாகத் தற்காக்கும்" என்று இறந்த காலத்தை (தற்காத்தார்) எதிர்காலமாக்கினார் கால வழுவமைதி. (2) தற்காக்கும் என்னும் சொல் தன்னைக் காத்துக்கொள்ளுதல் என்றர்த்தப்படும். உ-ம்.

தற்காத்து தற்கொண்டார் பேணி தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (குறள்).
தற்காத்து—தன்னைக் காத்துக்கொண்டு.
தற்கொண்டார்—தன்னைக் கொண்டவர். (கணவன்)

கிறிஸ்தவத் தமிழில் தப்பாக வழங்கும் இவ்வார்த்தையைத் தனித் தமிழ் பிரயோகத்தில் வழங்குவதே இயல்பாகும்.

(இன்னும் வரும்) S. W. SAVARIMUTHU, *Madras.*

———:———

## மாதர் பகுதி

### ஏழைப் பெண்கள்

"கிறிஸ்தவரே, தரித்திரரே, கிருபையிலே பெருகுவீரே" என்று கீர்த்தனையொன்றில் வார்த்தைகள் அமைத்தவர் வாயில் சர்க்கரைபோடவேண்டுமென்று நினைக்கிறேன். (தேவசுதன் உயிர்த்தார் என்று துவக்கும் கீர்த்தனையை இயற்றிய மாஜி P. M. மிகாயேல் பிள்ளை இறந்து 30 வருஷங்களுக்கு மேலாகி விட்டதால் இவ்விருப்பம் நிறைவேற வழியில்லை. அரு. பத்.) தமிழ் கிறிஸ்தவர்களில் பெரும்பாலார் தரித்திரரென்பதில் சந்தேகமில்லை. அதிலும் ஏழைப் பெண்களின் பாடு திண்டாட்டந்தான். புருஷன் இறந்து பிள்ளைக்குட்டிகளோடு அவதிப்படும் பெண்களின் நிலைமை எவ்வளவோ பரிதாபம். நவீன நாகரீகத்தின் சுகங்கண்ட பெண்களாயிருந்தால் அவர்கள் மனக்கஸ்தியை என்னென்று சொல்ல?

என் பாட்டியார் இறந்து பல வருஷங்களாகிறது. நானும் கிழவயதை யணுகிவிட்டேன். நான் சிறு பிள்ளையாயிருக்கையில் என் பாட்டியார் சொன்ன பல பழங்கதைகளை நான் மறக்க முடியவில்லை. அவர்கள் புருஷன் இறந்துபோகையில் அவர்களுக்கு முப்பது வயது. அவர்களுக்கு இரு பிள்ளைகள், பெண்ணொன்று, ஆணொன்று. என் தாயாரையும், மாமனையும் வளர்ப்பதில் அவர்களுக்கிருந்த சங்கடங்களுக்கு அளவில்லை. என் பாட்டனார் ஒரு சொத்தும் வைத்துவிட்டுப் போகவில்லை. பாட்டியார் தன் காதிலும் கழுத்திலும் மாட்டியிருந்த நகைகளை விற்று சில்லறைக் கடன்களைக் கொடுத்துவிட்டு மீதிப் பணத்தில் ஒரு எருமைமாடும் பசுமாடும் வாங்கினார்கள். அவைகளின் பாலைக் கறந்து விற்றார்கள். பாலில் தண்ணீர் கலப்பதில்லை. நெய் உருக்கி விற்றதிலும் வரும்படி இருந்தது. விராட்டி தட்டி விறகுச் செலவைக் குறைத்தார்களாம். காலையில் ஆப்பம்சுட்டு



என் மாமனிடம் கொடுத்து வாடிக்கை வீடுகளில் விற்பார்கள். என் பாட்டியார் சுடும் ஆப்பத்தின் ருசியை நினைக்க நினைக்க இன்றைக்கும் வாயூறுகிறது. சாயங்காலத்தில் அவர்கள் வீட்டுக்குப்பின் இருந்த தோட்டத்தில் பயிர்போட்டு தங்களுக்கு வேண்டிய காய்கறிகள் போக மீதியை விற்றார்களாம். சந்தையில் நெல் வாங்கித்தானே வேகவைத்து, காயப்போட்டு, தானே கைக்குத்தால் அரிசியாக்கிச் சாப்பாட்டுக்கு உபயோகித்தார்கள். அக்காலத்தில் நெல் குத்தும் யந்திரம் நமது நாட்டிற்குள் நுழையவில்லை. என் மாமனும், தாயாரும் என் பாட்டியாருக்கு வீட்டு வேலையில் பலவித உதவிகளைச் செய்தார்கள். இரண்டு ரூபாய்க்கு அவர்கள் வாங்கின ஒரு ஆட்டை வளர்த்து ஐந்து வருஷங்களுக்குள் ரூ. 100 லாபம் அதினால் கிடைத்ததாம். சுறுசுறுப்புள்ள விதவை தன் இரு பிள்ளைகளையும் ஆண்டவருடைய ஒத்தாசையால் முன்னுக்குக் கொண்டுவந்துவிட்டார்கள். ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் தவறாமல் குடும்ப ஜெபம் நடத்தி, தன் பிள்ளைகளைத் தேவ பயத்தில் வளர்த்தார்கள். இப்பழக்கம் இன்னாள் வரைக்கும் எங்கள் குடும்பங்களில் நிலைத்து வருகிறது.

"கிறிஸ்தவரே, தரித்திரரே, சுறுசுறுப்பில் பெருகுவீரே" என்று தற்காலத்தில் பாட்டுப்பாடினால் தகுமென எனக்குத் தோன்றுகிறது. வேலை செய்ய அநேக சகோதரிகள் வெட்கப்படுகிறார்கள். தாங்கள் கைப்பாடுபட்டு வேலை செய்யாமல் பிறரிடத்தில் உதவி தேடுகிறதைப் பார்க்கிறோம். பிச்சை கேட்பதுதான் கேவலம். வேலை செய்வது மேன்மை. திருச்சபையார் ஆங்காங்கு சுறுசுறுப்புள்ள ஏழைச் சகோதரிகளுக்கு மாடு வாங்கவோ, ஒரு பழைய தையல் மெஷீன் வாங்கவோ, ஒரு கைத்தொழிலுக்கான கருவிகள் வாங்கவோ கடன் கொடுத்து அந்த முதலைக் கொஞ்சங் கொஞ்சமாய் வசூலிக்க ஏற்பாடு செய்தால் நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. காய்கறிகள், பழவகைகள், சிறு சட்டைகள் பைகள் முதலிய சிறு வியாபாரங்கள் செய்கிற கிறிஸ்தவ பெண்களை நான் எங்கும் காணவில்லை. என்ன காரணமோ?

ஏழைகளுக்குத் தனியாட்கள் சமயா சமயங்களில் சாப்பாட்டுக்காகப் பண உதவி செய்வதைவிட பெண்கள் கூட்டம் கலந்தாலோசித்து ஏதோ தொழில் முறையையோ, சிறு வியாபாரமோ தொடங்கிச் சுயாதீனமாய்ப் பிழைக்க வழிவகைகளையுண்டு பண்ண முயற்சி செய்தால் பெரிய நன்மையுண்டாகுமென நினைக்கிறேன். பாட்டியின் ஞாபகம்.

———:———

## வாலிபர் பகுதி

### குப்பைவண்டி அல்லது புறங்கூறுதல்

ஜனங்களுக்குள்ளே அங்குமிங்கும் கோள் சொல்லித் திரியாயாக லேவி. 19: 16

மதுரை, மதராஸ், மலையாளம் முதலிய பட்டணங்களில் காலையிலும் மாலையிலும் குப்பை வண்டிகள் இடசாரி, வலசாரி போகிறதைக் காணலாம். ஊர் குப்பைகளை ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு போகவே இவைகள் வருகின்றன. அவ்வண்டி ஒவ்வொரு வீட்டண்டையும் நின்று: அம்மா! உங்கள் வீட்டுக் குப்பை என்ன? ஐயா! உங்கள் வீட்டுக் குப்பை என்ன? கொடுங்கள், நான் கொண்டுபோகிறேன் என்று சொல்லும் வண்ணம் ஒவ்வொரு வீட்டண்டையும் நின்று நின்று குப்பைகளை வாரிக்கொண்டு போகிறதைக் காணலாம். ஆம்! அப்படியே புறங்கூறித்திரிகிற புனித ஆத்துமாக்களுமிருக்கிறார்கள். அவர்கள் வருகிறது நம் குடும்ப குப்பைகளை வார; போகிறது குப்பைகளைக் கொண்டுபோக; திரிகிறது குப்பைகளைத் தூவிக்கொண்டுபோக. அந்தோ! இவர்கள் கர்த்தருடைய வசனத்தைச் செம்மையாய் படியாததினாலன்றோ இவ்வினைத் தொழிலுக்குத் தொண்டர்களானார்கள். குப்பை வண்டியினால் ஏழு பாடங்களைக் கற்றுக்கொள்ளலாம்.

1. வண்டி (Van) :—குப்பைகளைக் கொண்டு போகும் வண்டிகள் பல்வேறாயினும் காலா காலங்களில் நாகரீக மடைந்திருந்தாலும் "குப்பை வண்டி" என்ற பெயர் மாறுமோ? தற்காலத்தில் மோட்டார் வண்டி கூட குப்பைகளைச் சுமந்து போகிறது அதிசயமே. அது போலவே நாம் பணக்கார வண்டியோ, பணமில்லாத வண்டியோ, அறிவுள்ளவண்டியோ, அறிவில்லா வண்டியோ, நாகரீக வண்டியோ, நாகரீகமில்லா வண்டியோ, பக்தியில்லா வண்டியோ, யாராயிருப்பினும் குப்பைகூளங்களை சுமக்கிற தொழிலை நாமும் செய்வோமானால் "வீண் அலுவற்காரர்" 2 தெச. 3: 11; "அலப்புகிறவர்கள்" 1 தீமோ. 5: 13 "அவதூறு செய்கிறவர்கள்" சங். 50: 20 "தூற்றித்திரிகிறவர்கள்" எரே. 9: 4; "பரிக்கிறவர்கள்" நீதி. 17: 9: "புறங்கூறுகிறவர்கள்" சங். 15: 3; "கோள் சொல்லுகிறவர்கள்" லேவி. 19: 16; என்ற பட்டப்பெயர் மாறுமோ? அந்தோ! தேவனுடைய பிள்ளைகளென்ற இனிய நாமம் மாறி இக்கேவலமான நாமம் தரித்து திரிவது எவ்வளவு வெட்கமான காரியம்.

2. வஸ்து (Contents) :—குப்பை வண்டிகளில் குவித்திருக்கும் சரக்குகளை கூர்ந்து நோக்குங்கால் விந்தையிலும் விந்தையாக இருக்கும். கழிக்கப்பட்டது, கிழிந்துப்போனது, பழமையானது, அழுகிப்போனது, அருவருப்பானது இன்னும் மற்ற பிரயோஜன மில்லாத வஸ்துக்களே நிறைந்திருக்கும். பழவர்க்கங்களில்லையோ, பூவர்க்கங்களில்லையோ, இன்னும் மற்ற புனிதவர்க்கங்களில்லையோ? ஆம்! நம் மனிதவர்க்கத்தினரிடம் எத்தனையோ நற்குணங்களிருக்க துற்குணங்களைத் தெரிந்துகொள்வானேன்? குப்பையில்லா வீடுண்டோ? குற்றங்குறைகளில்லாத குடும்பமுண்டோ? குறைவில்லா சபையுண்டோ? தன் சகோதரனின் கண்ணில் அழுக்கிருக்கிறதாக கண்டவுடன் நம் கை நம் கண்ணில் அழுக்கிருக்கிறதா என்று அறிய விரைவில் செல்லும் இயற்கையை மறந்துவிட்டீர்களா? நம்முடைய கண்ணைத் தொட்ட மாத்திரத்தில் புறத்தியானும் தன் கண்ணில் அழுக்குண்டோ என்று தொட்டு பார்க்கிறதை காணவில்லையா? மற்றவர்களின் குற்றங் குறைகளை கூட்டி, கழித்து, வகுத்து, பெருக்க நம்மை கணித சாஸ்திரியாக்கினது (Mathematics Professor) யார்? அன்னப் பறவையின் அருங்குணம் நமக்கு அமையாதோ? தேன் ஈயின் குணம் நம்மில் இலங்கி துலங்காதோ? "பொல்லாத மனுஷன் தன் இருதயமாகிய பொல்லாத பொக்கிஷத்தினின்று பொல்லாததை எடுத்து காட்டுகிறான்." லூக். 6: 45.

3. வாசனை (Smell) :—நம்மை கடந்துபோகும் ஒவ்வொரு வண்டிக்கும் பிரத்தியேகமான வாசனையுண்டு. ரொட்டி வண்டி, புஷ்ப வண்டி, பழ வண்டி முதலிய வண்டிகளின் வாசனை இன்னதென்று நாம் அறிவோம். குப்பை வண்டியின் வாசனையையும் நாம் அறிவோம். அதைக்கண்ட மாத்திரத்தில் முகம் சுளுக்கிறது, கை நாசியை பிடிக்கிறது, கால் விலகி ஓடுகிறது. ஆம்! நம் அங்கம் முழுவதும் தவித்து அவஸ்தைப்படுகிறது. அதுபோலவே அனேகருடைய சமூகமும், சம்பாஷணையும் சவகாசமுமிருக்கிறது. அவர்கள் வந்த மாத்திரத்தில் ஒருவிதமான துற்நாற்றம் வீசுகிறது. அந்த வீட்டு அழுகிப்போன பழம், இந்த வீட்டு பழைமையான பதார்த்தம், பக்கத்து வீட்டு கிழிந்துபோன கந்தை, உடைந்துபோன சட்டிப்பானை முதலியவைகளை கொண்டுவந்து கொட்டுகிறார்கள். ஐயோ! இவர்கள் ஏன்தான் நம் வீட்டுக்கு வந்தார்கள் என்று சொல்லத் தக்கதாக அவ்வளவு அருவருப்பான வாசனையை வீசிவிட்டு போகிறார்கள். அந்தோ! நாம் போகுமிடங்களில் நற்கந்தமாயிருப்பதற்கு பதிலாக துற்கந்தமாயிருப்பது எவ்வளவு துயரமான காரியம். "தூற்றிக்கொண்டு திரிகிறவன் இரகசியங்களை வெளிப்படுத்துகிறான்; ஆதலால் தன் உதடுகளினால் அலப்புகிறவனோடே கலவாதே." நீதி. 20: 19.

4. வல்லமை (**Influence**) :—குப்பை வண்டி வந்த மாத்திரத்தில் அங்கு பரவியிருக்கும் சகல நற்கந்தங்களையும் மேற்கொண்டு தன்னுடைய துற்கந்தத்தை பரவ செய்கிறதை நாம் அறிவோம். அதுபோலவே, அவதூறாய் பேசித்திரியும் ஆத்துமாக்களும் சகல ஆவிக்குரிய நற்கந்தங்களையும் கெடுத்துக் கிரைவழியாக்கக் கூடியவர்களாக இருக்கிறார்கள். கர்த்தரோடு பழகி ஜீவிக்கும் ஆத்துமாக்கள் எப்பொழுதும் தெய்வ சமாதானம், சந்தோஷம், அமைதல், அடக்கம் முதலிய வாசனைகளால் நிறைந்திருப்பார்கள். அப்படிப்பட்டவர்களுக்குள் இந்த குப்பை வண்டி வருமானால் என்ன சம்பவிக்கும்? பரிதாபம். சிலரை நாம் கண்டமாத்திரத்தில் நம்முடைய வாயை பொத்தி, செவியைய அடைத்துக்கொள்ளவேண்டியதாய் இருக்கிறது. உஸ், உஸ், என்று அமைதலாயிருக்கவேண்டியதாயிருக்கிறது. இவ்வளவு பயமும் அச்சமும் ஏன்? ஆ! அது ஒரு கொடிய குப்பை வண்டி; கூடியிருந்து குழப்பத்தை உண்டாக்கும், இரகசியமாய் அவதூறு பண்ணும் என்ற பயமன்றோ? ஆத்துமாவே! இக்கொடிய சுபாவத்திலிருந்து விடுதலையாகாயோ? இல்லாவிடில் கர்த்தர் உன்னை "சங்கரிப்பேன்" (சங். 101 : 5) என்ற எச்சரிப்பைக் கவனத்தில் வை.

5. வாசம் (**Place**) :—குப்பை வண்டிகள் கொண்டுபோகும் குப்பை கூளங்களின் கதி என்ன? பள்ளத்திலும் பாதாளத்திலும் போட்டு, சுட்டெரிப்பார்களன்றோ? ஆன்ம குப்பை வண்டியே! உன் கதி என்ன? இப்பொழுது நீ செய்துவரும் தொழில் உனக்கு கௌரவமாகவும், குதூகலமாகவுமிருக்கலாம். ஆனால் சற்று உன் முடிவை யோசித்துப்பார். உன்னுடைய தெய்வ பக்தி வீண் (Religion is vain) என்பதின் அர்த்தம் என்ன? (யாக். 1 : 26) வீணால் பாதாளமும் அவியா அக்னியும்தான் உன் கதியன்றோ? "குற்றத்தை மூடுகிறவன் சிநேகத்தை நாடுகிறான். கேட்டதை சொல்லுகிறவன் பிராண சிநேகிதரையும் பிரித்துவிடுகிறான்." சமுத்திரம் தன்னில் வந்து விழும் சகல தண்ணீரையும் மறைத்து சுத்த ஜலத்தை வெளிப்படுத்துகிறதுபோல் நாமும் செய்தால் எவ்வளவு நலமாகயிருக்கும். "ஆவியில் உண்மையுள்ளவனே காரியத்தை அடக்குகிறான்" நீதி. 11 : 13 என்ற உண்மை நமக்கு இருக்குமானால் எத்தனை மனோகரமாக இருக்கும்.

8. வாருகிறவன் (**Sweeper**) :—குப்பை வண்டியை ஓட்டுகிறவனுக்கும், எடுக்கிறவனுக்கும் யாதொரு வாசனையும் வராமலிருப்பதின் காரணம் என்ன? நம்மால் ஒரு நிமிஷமும் சகிக்க முடியவில்லையே, அவர்கள் எப்படி அனுதினமும் சந்தோஷமாக



சகித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆம், அவர்கள் அந்த வாசனையை முகர்ந்து, முகர்ந்து சர்வ சாதாரணமாக மாறிவிட்டது. ஆதலால் அவர்களுக்கு எள்ளளவேனும் வெறுப்பில்லை. ஆம்! அப்படியே அனுதினமும் அங்கும் இங்கும் ஓடி மற்றவர்களின் குப்பைக் கூளங்களை முகர்ந்து, முகர்ந்து யாதொரு உணர்ச்சியும், மனஸ்தாபமும், அச்சமுமின்றி தைரியமாக இந்த கௌரவ வேலையைச் செய்து வருகிறவர்கள் எத்தனை? இதுவும் ஒரு அதிசயமே. இப்படிப்பட்டவர்களைக் குறித்துதான் "சூடுண்ட மனசாட்சியுள்ளவர்கள்" "இரண்டு தரம் செத்தவர்கள்" "கண் சொருகிப்போனவர்கள்" என்ற பல பெயர்களெல்லாம் சூட்டியிருக்கிறது. கர்த்தர் நம்மை இந்த கேவலமான தொழிலிலிருந்து தற்காப்பாராக.

7. வழி (**way to overcome**) இக்கொடிய சுபாவத்தினால் உண்டான கெடுதிகள் கணக்கிலடங்கா. அதை நாம் சற்று உட்கார்ந்து யோசிப்போமானால், நாம் தேவனுடைய இராஜியத்திற்கும் அதனுடைய அபிவிருத்திக்கும் எவ்வளவு இடறலாய் இருந்திருக்கிறோம் என்பது பிரத்தியட்சமாகும். கர்த்தர் நம்மை எல்லா பாவங்களிலிருந்தும் விடுவிக்க வல்லவராயிருக்கிறார். நாம் ஏசாயாவைப்போல் ஐயோ! நான் அதமானேன். நான் அசுத்த உதடுள்ள மனுஷன் என்ற உணர்ச்சியோடும் உடைந்த இருதயத்தோடும் நம்மை சமூலமாய் அவருக்கு படைப்போமாக. அவர் தமது நெருப்பு தழலை எடுத்து அதனால் நம் வாயைத் தொட்டு இதோ! இது உன் உதடுகளைத் தொட்டதினால் உன் அக்கிரமம் நீங்கி உன் பாவம் நிவர்த்தியானது என்று சொல்லுவார். அப்பொழுது நம்முடைய நாவு பரிசுத்த மடையும். அப்பொழுதுதான் குப்பை வண்டியாக இருந்த ஜீவியம் கோமகன் வண்டியாகும். கோமகனாகிய இயேசு எம்பெருமான் நம்முடைய ஜீவிய வண்டியில் வாசம் பண்ணும்போது எவ்வளவு மகிமையாயிருக்கும். காண்கிறவர்கள் கனம் பண்ணுவார்கள், கேட்கிறவர்கள களி கூருவார்கள், நம்முடைய சுகந்த வாசனையை விரும்புவார்கள். ஆம்! இந்த உன்னத நிலைமையை அடைந்து, நாம் மற்றவர்களின் குற்றங்குறைகளை சுமந்து திரியாது அவர்களின் நற்குணங்களையே சுமந்து திரிய ஆண்டவர் அருள்புரிவாராக! "அவன் தன் நாவினால் புறங்கூறாமலும், தன் தோழனுக்கு தீங்கு செய்யாமலும் தன் அயலான் மேல் சொல்லப்படும் நிந்தையான பேச்சை எடுக்காமலும் இருக்கிறான்" சங். 15 : 3 என்ற உயர்குணங்கள் நம்மில் இலங்கி துலங்கினால் கர்த்தருடைய நாமம் எவ்வளவாய் மகிமைப்படும்.

**சத்திய சமய சஞ்சீவி.**

———:———

## சிறைச்சாலையில் சங்கீதம்

ருஷ்ய தேச வாலிபரை கிறிஸ்துவுக்காக ஆதாயம் பண்ண வழி வகைகளை யோசிக்க 1921ம் வருஷம் 50 பேர் ஓரிடத்தில் கூடி ஆலோசித்தார்கள். இவர்கள் கூட்டம் கூடிய மூன்றும் நாள் சிவப்புச் சேனையின் போர்வீரர் அக்கூட்டத்திற்குள் திடீரெனப் பிரவேசித்து தங்கள் துப்பாக்கிகளை அவர்களுக்கெதிரே பிடித்து "துரைத்தனத்திற்கு விரோதமாகத் துர் ஆலோசனை செய்கிறீர்களா" என்று கர்ஜித்தார்கள். அவர்கள் கேள்விக்கு அச் சகோதரர் யாதொன்றும் பதிலுரைக்கவில்லை. நீங்கள் இப்பொழுது ராஜீய கைதிகள் என்று அவ்வீரர் உரத்துக்கூவினார்கள். அவர்களைச் சிறைக்கூடத்திற்குப் போர்ச் சேவகர்கள் தள்ளிக்கொண்டு போகுமுன்னே தேவனுடைய பிள்ளைகள் ஜெபம் செய்து தெய்வ கிருபைக்குத் தங்களை ஒப்புக்கொடுத்தார்கள்.

துரைத்தன வீரரால் நடத்தப்படும்போது அக்கிறிஸ்தவ வாலிபர் சுவிசேஷ பாடல்களைப் பாடிக்கொண்டே போனார்கள். வழியெங்கும் ஜனங்கள் திரண்டு கூடினார்கள். சிறைக்கூடத்திற்குள் பிரவேசிக்குமுன், நாலா பக்கங்களிலும் சூழ்ந்துகொண்ட ஜனங்களைக் கலைப்பதே அவ்வீரர்களுக்குப் பெரிய வேலையாய்ப் போய்விட்டது. சிறைக்கூடத்திற்குள் இந்த வாலிபர்களை அல்லாமல் பலவகைப்பட்ட கைதிகளும் வந்து சேர்ந்தார்கள். கர்த்தர் நிமித்தமாக யாதொரு குற்றமில்லாமல் பாடனுபவிக்க வேண்டிய வாலிபர் மௌனமாயிராமல் வெகுதூரம் கேட்கத் தக்கதாக சுவிசேஷ கீதங்களைச் சப்தமாய் பாடினார்கள். சிறைக்கூடத்து அதிபதி இவர்களின் பாடல்களை வெகுநேரம் கேட்டுவிட்டு, அவர்களண்டையில் வந்து: உங்களுடைய பாட்டினாலே எங்கள் வேலைகளெல்லாம் கெட்டுப்போகிறது, தெருவிலே ஜனங்கள் கூட்டம் கூட்டமாய் நிற்கிறார்கள்; ஆகையால் இத்தோடு உங்கள் பாடல்களை நிறுத்துங்கள் என்று கட்டளையிட்டான். அவர்களோ: சோவியத் ஐக்கியத்தின் ஒழுங்குப் பிரகாரம் மதப்பிரசாரம் பண்ணவோ அல்லது அதற்கு எதிர்பிரசாரம் பண்ணவோ குடி பிரஜை எவனுக்கும் உரிமையுண்டு. மேலும் வாயில்வந்தபடி மற்றகைதிகள் தூஷிக்கவும் சபிக்கவும் யாதொரு தடையில்லாதிருக்க, கடவுளுக்கு மகிமையாக நாங்கள் பாடும் பாடலுக்கு எவ்வித தடையும் இருக்கக்கூடாது என்று மறுத்துப் பேசினார்கள். இதைக் குறித்து வெகுவான சம்பாஷணைகள் செய்தபின்: உத்தியோகஸ்தருடைய வேலைகளுக்கு இடையூறு இல்லாதபடிக்கு இந்த கிறிஸ்தவ சகோதரர் முற்பகலிலும் பிற்பகலிலும் இரண்டே மணி நேரம் பாடி, மற்ற சமயங்களில்



அமைதலாய் இருக்கவேண்டுமென்று ஒழுங்குசெய்யப்பட்டது. இதற்கேற்ப அவர்கள் தங்களுக்குக் குறிக்கப்பட்ட நேரங்களை சரியாய் உபயோகிக்குமாறு ஒரு கால அட்டவணையை வகுத்துக்கொண்டார்கள். தேவ வசன தியானம், ஜெபம், பாடல்கள், சம்பாஷணையில் அவர்கள் நேரத்தைப் பின்னிட்டார்கள். காவல் கிடங்கின் நடுவில் கர்த்தருடைய ஊழியர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைச் சுற்றிலும் மற்ற கைதிகள் நின்று தேவ வசனத்தின் மூலமாகவும் பாடல்கள் மூலமாகவும் அந்த பக்தர்கள் பிரசித்தம் பண்ணியதைக் கவனித்துக் கேட்டார்கள். பிலிப்பி பட்டண சிறைச்சாலையிலே: நான் ரட்சிக்கப்படுவதற்கு என்ன செய்வேன்? என்ற கேள்வி பிறந்ததுபோல இக்கைதிகளிலும் சிலர் கேட்க ஓர் நல்ல சமயம் ஏற்பட்டது.

சில நாட்கள் சென்றபின் கிறிஸ்தவ சகோதரர்களில் பெரும்பாலர் விடுதலை பெற்றார்கள். எங்களுடைய விஷயத்தைப்பற்றி முடிவான விசாரணை நடக்குமட்டும் எங்களுடைய ஊரைவிட்டு எங்கும் போகமாட்டோமென்று அவர்கள் சர்க்காருக்கு ஓர் வாக்குறுதி எழுதிக்கொடுக்கத் தேவையாயிற்று. மீதி 12 பேர் சிறைச்சாலையிலேயே இருந்து பலவித வேலைகள் செய்யக் கட்டளை பெற்றார்கள். அந்த வேலை செய்யும்போதும் கர்த்தருடைய வசனத்தைச் சந்தோஷமாய்ப் போதித்தார்கள்.

இவர்களும் அநேக மாதங்களுக்குப் பிறகு விடுதலை பெற்றார்கள். இச்சகோதரர் ராஜாங்க விஷயங்களிலே எவ்விதமும் தலையிடாமல் மார்க்க சத்தியத்திற்காகவே கவனம் செலுத்தினார்கள் என்று மொஸ்கோவிலிருந்த மேல் அதிகாரிகளுக்குத் தெரியவந்தது. அவர்கள் சிறையிலிருந்த கிறிஸ்தவ சகோதரரை வெளியே அனுப்ப உத்திரவுகொடுத்ததுமன்றி அவர்களைச் சிறையில் போட்ட பிரதம உத்தியோகஸ்தனை அதற்குச் சரியான நியாயம் சொல்லும்படி மொஸ்கோவிற்கு வரவழைத்தார்கள்.

இந்த உத்தியோகஸ்தன் ஒருகாலத்தில் கிரேக்க சபையின் குருவாயிருந்தவன். அவன் போலீஸ் உத்தியோகத்திற்கு வந்த பிற்பாடும் இதர கிறிஸ்தவர்கள் பேரிலுள்ள முந்தின பகையை விட்டவன் அல்ல. மொஸ்கோவில் விசாரணை நடந்தபிறகு அவனுக்குச் சர்க்கார் தண்டனை விதித்துவிட்டார்களென்று கிறிஸ்தவ சகோதரர் கேள்விப்பட்டு, இயேசுவின் சீஷராகிய நாங்கள் எங்களுக்கு நடந்த அநியாயத்தை மன்னிக்க விரும்புகிறோம். ஆகையால் தயவுசெய்து துரைத்தனத்தார் அந்த உத்தியோகஸ்தனுக்கு விடுதலை அளிக்கவேண்டுமென்று மனுச்செய்துகொண்டார்கள்.

இந்த மனுவிற்கு சர்க்கார் கொடுத்த பதில் பின்வருமாறு: சுவிசேஷ கிறிஸ்தவர்கள் தங்கள் சத்துருவுக்கு மன்னித்து அவனுக்காகப் பரிந்து பேசுவது போற்றத்தக்கது. ஆயினும் குற்றம் செய்தவன் அதற்குரிய தண்டனையைப் பெற்றுக்கொள்வது அவனுக்குச் செம்மையான புத்தி கற்பிக்கும்.

தீர்மானத்தின்படியே அழைக்கப்பட்டிருந்து பராபரனைச் சிநேகிக்கிறவர்களுக்கு எல்லாக் காரியங்களும் நன்மைக்கு உதவி செய்கிறது என்று அறிந்திருக்கிறோம். ரோ. 8. 28.

மொழிபெயர்ப்பு :—LICHT V. LEBEN.

———:———

## பாலியர் உலகம்

ஒரு மனுஷனுடைய வாழ்நாட்களில் சிறந்தது இளமைப் பருவமே. அப்பருவத்தில் கொள்ளும் பழக்க வழக்கங்களே இறுதிவரை நீடித்திருக்கும்.—ஜான் ரஸ்கின்.

அன்பார்ந்த சகோதரர்களே! உங்கள் இளமைப் பருவம் காலைப்பொழுதை ஒத்தது. காலைப்பருவம் மாசற்றுப் பொலிவுற்று விளங்குவதைப்போல் இளமைப் பருவம் மாசற்று பொலிவுற்று விளங்குவதாகும். ஆதலின் இளமைப் பருவத்தில் உங்கள் உடல் வளர்ச்சியும், மன வளர்ச்சியும் விசேஷமாக சன்மார்க்கப் பயிற்சியும் பழகி வருதல் பிற்கால வாழ்க்கைக்கு மிக்க நன்மை தரும். உலகிடை தோன்றிய ஒவ்வொருவனும் தனது வாழ்க்கையை தனக்கும் பிறர்க்கும் முக்கியமாக கடவுளின் நாம மகிமைக்கும் பயன்படுமாறு செவ்வனே வாழ்ந்து வருதல்வேண்டும்.

பாலிய வீரர்களாகிய நீங்கள்தான் பிற்கால திருச்சபைத் தூண்கள். திருச்சபையில் உங்களுக்கு மிகுதியும் பங்கு உண்டு. ஆக இது சமயம் நித்திரை மயக்கத்தை விட்டு விழிக்கவேண்டும். ஏனெனில் முதியோர் காலம் போய்க்கொண்டயிருக்க அவர்களைக் காடு ஒரு பக்கம் வா! வா! எனவும், வீடு ஒரு பக்கம் போ! போ! எனவும் அறைகூவிக் கொண்டேயிருக்கிறது. இதோ உங்கள் அன்னையாகிய திருச்சபை அறுப்போ மிகுதி வேலையாட்களோ கொஞ்சம் என அங்கலாய்த்து ஆட்களுக்கு எதிர் பார்த்துக்கொண்டேயிருக்கிறாள்.

ஆகவே பாலிய வீரர்களாகிய நீங்கள்தானே ஆட்கள். உங்கள் ஆருயிர் அன்னை, திருச்சபையினிடத்து கைமாறு கருதாது பெற்ற அளவற்ற நன்மைகளுக்கு நன்றி காட்ட வேண்டாமா? நீங்களும் திருச்சபைக்கு செய்யவேண்டிய தொண்டு அநேகம்



உண்டு. ஆக நீங்கள் இப்போழுதே உங்கள் ஜீவியத்தைக் கிறிஸ்துவுக்குப் பிரதிஷ்டை செய்து உங்களுக்குப் பிரயோஜனமாகவும் மற்றவர்களின் நன்மையைக் கருதியும் கிறிஸ்துவுக்கு மகிமை யுண்டாகவும் ஜீவியம் செய்யத்தொடங்குங்கள். இதற்கு உதாரணமாக ஒரு சிறு பெண் ஒரு பேர்போன கைதியை எப்படிக் குணப்படுத்தினுள் எனப் பாருங்கள்:

அநேக வருஷங்களுக்கு முன் சிகாகோ நகரத்தில் பன்னிரண்டு வயதுள்ள ஓர் பெண் பள்ளிக்கூடத்துக்கு ஒரு சிறைச்சாலையைக் கடந்து போகையில் ஒரு மனிதன் சிறைச்சாலையின் ஜன்னலின் வழியாக அப்பெண்ணைக் கூப்பிட்டு தயவுசெய்து எனக்கு ஒரு உதவிசெய்ய முடியுமா? என்று கேட்டான். அந்தப் பெண் அது முதல் அநேக வாரங்களாக ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும் தன் தகப்பனின் புஸ்தகங்களிலிருந்து ஒவ்வொரு புஸ்தகம் எடுத்துக்கொண்டுபோய் அம்மனிதனுக்குக் கொடுத்தாள். அம்மனிதன் அப்புஸ்தகங்களை ஒழுங்காய் வாசித்துத் தான் செய்த கொடிய பாவங்களையுணர்ந்து மனம் மாறினவனுனன். அவன் வியாதிப்பட்டு மரணத்தருவாயிலிருக்கும்போது அப்பெண்ணைக் கூப்பிட்டான். அவள் வந்ததும்: சிறு பிள்ளையே! நீ என் ஆத்துமாவை ரட்சித்தாய். நீ எனக்குச் செய்தமாதிரி இங்கே இருக்கும் கைதிகளுக்கும் உன் ஜீவிய காலமெல்லாம் செய் என்றுன். அப்பிள்ளை அப்படியே செய்வேன் என வாக்களித்து தன் ஜீவிய காலமெல்லாம் கைதிகளுக்கு அனுதாபங்காட்டி அநேக சிறைச்சாலைகளில் புத்தக நிலையமும் வைத்தாள். அவள் அடிக்கடி கைதிகளைப் பார்க்கப் போய் அநேகருக்கு உதவி செய்து அவர்கள் ரட்சிப்புக்குக் காரணமானுள். இவ்வாறே நீங்களும் உங்கள் வாணுளை வீணுக்காது பிறருடைய நன்மைக்காக உங்களாலியன்றதைச் செய்ய மறவாதிருங்கள்!

பாலியர் தோழன், து. பால்ஞானசுந்தரம், சீர்காழி.

———:———

## திருச்சபை வர்த்தமானம்

———

**சுவிசேடப் பிரபல்ய ஊழியம், நாச்சியார்கோவில் (கும்பகோணம்)**

நன்னிலம், பாபநாசம், நாகப்பட்டணம், கும்பகோணம் முதலிய தாலுக்காக்களில் ஆயிரக் கணக்கான ஆதி திராவிட வகுப்பைச் சேர்ந்த ரோமான் கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள். சுமார் இரண்டு வருடங்களாக இவர்களுள் ஒரு பெரும் அசைவு ஏற்பட்டிருக்கிறது. கல்வி விருத்தியினுலும், தற்காலச் சமூக

அபேத அபிவிர்த்தியினுலும், நாகரீகத்தினுலும், இந்த ரோமான் கிறிஸ்தவர்கள் தங்கள் சமூகத்தையும் சீர்படுத்த எண்ணங் கொள்ளுகிறார்கள். இதற்குத் தடையாயுள்ளது தங்கள் சபையிலுள்ள ஜாதி வித்தியாசம், குருக்களுக்கடிமைத்தனம், சத்திய வேதம் அறியாமை என்பவையே என்று அறிந்து, இவைகளை ஒழித்துச் சபையைச் சீர்படுத்தின மார்டீன் லுத்தரின் சுத்த சுவிசேட சபையையே சேரவேண்டும் என்பது இவ்வியக்கத்தில் ஈடுபட்டுழைக்கும் தலைவர்களின் எண்ணம். நாச்சியார் கோவில் இந்த இயக்கத்துக்கு நடுமையமான இடமாக எண்ணப்படுவதால், லேப்சிக் மிஷன் சங்கத்தார் அவ்விடத்தில் சுவிசேடப் பிரபல்ய ஊழியம் அதிதீவிரமாய் நடைபெறவும், சேர விரும்புவோர்கள் ஆராதிக்க ஓர் ஆலயமும் திட்டம் செய்திருப்பதோடு, இவர்களின் பிள்ளைகளை நமது திருச்சபையின் போதனையிலும் ஒழுங்கிலும் வளர்ப்பதற்காக, இவ்வருடம் எட்டுப் பிள்ளைகளை இலவசமாக நமது மாயவரம், தரங்கன்பாடி ஆதரவு பாடசாலைகளில் ஏற்றுக்கொண்டார்கள்.

கடந்த இரண்டு மாதங்களாக நமது ஞானோபதேசத்தில் போதிக்கப்பட்டு, பத்து கிராமங்களினின்று வந்த சுமார் 50 ஆத்துமாக்கள் கடந்த ஜூலை மாதம் 30ஆம் தேதியாகிய ஞாயிற்றுக்கிழமை காலை ஆராதனையில் சங். J. வாக்னர் ஐயர் அவர்களால் நமது சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். இன்னும் அநேகக் குடும்பங்கள் நமது சபையில் சேர விரும்புகிறார்கள். இவர்கள் நடுவில் செய்யப்படும் ஊழியம் சித்தி பெறும்படி ஜெபிக்க வேண்டுகிறேன். இவர்கள் நமது திருச்சபையின் போதகத்தில் வளரவும், வேத அறிவில் தேறவும், ஞானப்பாட்டுகள், கீர்த்தனைகள், ஞானோபதேசங்கள், வேத புத்தகம் முதலியன தேவையாயிருப்பதால், தங்களிடம் உள்ள பழைய புத்தகங்களை அடியிற் கண்ட விலாசத்துக்கு அனுப்பும்படி அன்புடன் எதிர்பார்க்கப்படுகிறது.

நாச்சியார்கோவில் P. O. D. D. RHENIUS.

———:———

# DANISH MISSION

Editor: REV. GNA. VEDAKAN, CUDDALORE N. T.

## I. ஞானஸ்நானம்

[இத்தலைப்பின்கீழ் கனம் P. வந்தால் ஐயர் எழுதியுள்ளார். பரிசுத்த ராப்போஜனத்தின்பேரிலும், விசுவாச அறிக்கையின் பேரிலும் பின்னால் எழுதுவார். கிராம சபையாருக்கு கற்றுக்கொடுக்கும் வேதோபதேச பாட முறையின்படி, ஞானோபதேச பாடமும் கற்றுக்கொடுக்க ஒழுங்கு உண்டு. கற்றுக்கொடுப்பவர்களுக்கு ஞானஸ்நானத்தின்பேரில் இக்குறிப்பு பயன்படும்படி எழுதியுள்ளார். இதுவிஷயமாய், வேறு குறிப்புகளோ அல்லது அபிப்பிராயங்களோ தெரிவிக்க விரும்புகிறவர்கள், கனம் P. வந்தால் ஐயருக்காவது பத்திராதிபருக்காவது தெரிவித்துக்கொள்ளலாம். பத்.]



### 1. ஞானஸ்நானமாவது என்ன?

ஞானஸ்நானமாவது வெறும் ஜலமல்ல, கடவுளுடைய கட்டளைப்படி அவரது வார்த்தையுடன் சேர்ந்திருக்கிற ஜலம்.

ஞானஸ்நானத்தைப்பற்றி நமது கடவுள் கொடுத்த கட்டளை யாவது: "நீங்கள் புறப்பட்டுப்போய்ச் சகல ஜாதிகளையும், சீஷராக்கிப் பிதா, குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திற்குளாக அவர்களுக்கு ஞானஸ்னனம் கொடுங்கள்." (மத். 28: 19)

ஞானஸ்நானமென்றால் கடவுள் நம்மைத் தமது பிள்ளைகளாக ஏற்றுக்கொள்வது. ஞானஸ்நானத்தில் கடவுள் தாம் நமக்குத் தகப்பனும் இரட்சகனும் சகாயனுமாயிருப்பேன் என்று தம்முடைய வாக்குறுதியைக் கொடுக்கிறார். இதனாலே தான் பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்கிறோம். ஆகையால் விசுவாசப் பிரமாணம் ஞானஸ்நானத்தில் சொல்லப்படுகிறது, ஏனென்றால் அதில் அவர் நமது தகப்பனும், இரட்சகராயும், சகாயராயும் இருக்கிறாரென்று அறிக்கை பண்ணுகிறோம்.

ஞானஸ்நானத்தில் இருக்கிற கடவுளுடைய உறுதிப்பாடு தண்ணீராகிய அடையாளத்தோடு சேர்ந்திருக்கிறது. கடவுளின் வாக்கு தான் சொல்லுகிறதைச் சிருஷ்டிக்கும், தான் கொடுக்கும் வாக்கை நிறைவேற்றும். அது நம்மைக் கடவுளுடைய பிள்ளைகளாக்குகிறது. ஞானஸ்நானத்திலிருக்கிற கடவுளின் வாக்கு மாறாதது. ஞானஸ்நானத்தின் முக்கிய அம்சம் மனிதனின் வாக்குமல்ல, அவன் அறிக்கையுமல்ல, கடவுளின் வாக்குறுதியே.

### 2. ஞானஸ்நானம் அருளுவது என்ன?

கடவுளுடைய வார்த்தையையும் அவர் கொடுத்த வாக்குத்தத்தையும் நம்பி, ஞானஸ்நானம் பெற்றுக்கொள்கிற எவனும் பாவ மன்னிப்படைந்து, சாவுக்கும், பிசாசுக்கும் தப்பி, நித்திய பாக்கியத்தை அடைவான்.

கடவுள் நமது பிதாவாகவும், இரட்சகராகவும், சகாயராகவும் நம்மீது கொண்ட சித்தமும் நம்மிடம் செய்யும் செய்கையும் என்னவென்றால், நமது பாவங்களை மன்னித்து நிவர்த்தியாக்குதலும் நித்திய ஜீவனை யருளுவதுமே. நமது தகுதியை நோக்கியல்ல, தேவையை நோக்கியே இவ்வரங்களைக் கொடுக்கிறார்.

இயேசு கிறிஸ்துவால் வருகிற இவ்வரங்களை மனுஷன் ஒரு வேளை கவனிக்காதிருக்கலாம் அல்லது அலட்சியம் செய்யலாம். ஆனால் அவன் மனந்திரும்பி விசுவாசத்தோடு ஏற்றுக்கொள்ளும்போது அவனுடையதாகும்படி எப்போதும் ஆயத்தமாயிருக்கின்றன. மனுஷன் உண்மையில்லாதவனுமாயிருந்தாலும் கடவுள் உண்மையுள்ளவராகவே நிலைத்திருக்கிறார்.

3. இத்தனை பெரிய நன்மைகள் ஜலத்தால் வருவதெப்படி?

ஜலத்தால் அல்ல, ஜலத்துடன் சேர்ந்திருக்கிற கடவுளுடைய வார்த்தையாலேயும், அந்த வார்த்தையை நம்புகிற நம்பிக்கையாலுமே கிடைக்கிறது. கடவுளது வார்த்தை அஜ்ஜலத்துடன் சேர்ந்திராவிட்டால், ஜலம் ஜலந்தான். அது ஞானஸ்நானமல்ல. ஆகவே கடவுளது வார்த்தைச் சேர்ந்துள்ள ஜலத்தினால் பெறுவதே ஞானஸ்நானமாகும். அதாவது அது எல்லையில்லாத கிருபையாய் ஜீவனை உண்டாக்குகிற ஜலமும், பரிசுத்த ஆவியானவா உண்டு பண்ணுகிற மறுஜென்ம முழுக்குமாகும்.

தண்ணீர் தானாகவே ஒரு காரியத்தைச் செய்து விடுகிறதில்லை. அது புறம்பான அடையாளமே. ஆனால் கடவுள் தமது வார்த்தைகளை ஞானஸ்நானத் தண்ணீரோடு சேர்த்திருக்கிறார். ஆதலால் ஞானஸ்நானம் பெற்ற மனிதன் கடவுளின் பிள்ளையாகிறான்.

தண்ணீராகிய அந்த அடையாளம் நமது விசுவாசத்தை உறுதிப்படுத்தக் கொடுக்கப்பட்டது, இந்தப் புறம்பான அடையாளத்தை அனாவசியமென்று எண்ணுபவன் கடவுளின் வரங்கள் அவசியமில்லை என்று சொல்லுகிறான்.

4. அப்படியானால் ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுப்பதின் கருத்தென்ன?

நம்மிலிருக்கிற பாவத்தால் கறைப்பட்ட பழைய ஆதாம் தனது எல்லா பாவங்களோடும் இச்சைகளோடும் தினசரி மனஸ்தாபம் மனமாறுதல் என்பவைகளால் அமிழ்த்தி யழிக்கப்பட்டு கிறிஸ்துவால் நம்மில் உண்டாக்கப்படுகிற புதிய மனுஷன் தினசரி புது உயிரோடு வளர்ந்து பரிசுத்தத்திலும் நீதியிலும் கடவுள் சமுகத்தில் சாஸ்வதமாய் வாழவேண்டும் என்பதுதான்.



ஞானஸ்நானம் என்ற வார்த்தைத் தண்ணீருக்குள் அமிழ்த்துதல் அல்லது தண்ணீரைக்கொண்டு கழுவுகிறது என்ற கருத்துடையது. தண்ணீரின் அளவு முக்கியமல்ல. அது புறம்பான அடையாளமே தவிர வேறல்ல. அந்த அடையாளத்தின் கருத்தே விசேஷம். அந்தக் கருத்தென்ன? இச்செய்கையால் முழுகிமரித்துப் பின்பு புதியவர்களாய் எழுந்திருக்கிறோம் என்பதுதான்.

ஞானஸ்நானச் செய்கையின் அர்த்தமென்ன?

கிறிஸ்துவின் ஞானஸ்நானம் பெறுகிறவர்கள் அவரோடு மரித்து அவரோடுகூட உயிரோடு எழுந்திருக்கிறார்கள் என்பதே. ஞானஸ்நானத்தில் கடவுள் நம்மைத் தமது பிள்ளைகளாக்குவதால் அதற்குப் பின்னான வாழ்வையெல்லாம் அவருக்கென்றே ஜீவிக்கவேண்டும். ஆதலால் ஞானஸ்நானம் நாம் அவருக்குக் கீழ்ப்படிதலுள்ள பிள்ளைகளாய் இருக்கவேண்டும் என்ற கட்டளையைத் தன்னுள்ளடக்கியிருக்கிறது.

ஞானஸ்நானம் பெறத்தக்கவர் யார்? கடவுள் மனிதனுடைய தகுதியை நோக்காமல் தேவையை நோக்குகிறார். அவருடைய வாக்குக்குச் செவிகொடுக்கிறவனுக்கு இந்த வாக்குத்தத்தத்தைக் கொடுக்கிறார். ஆகையால் கடவுளின் வார்த்தையை ஏற்றுக்கொண்டு அதைக் கற்றுக்கொள்ள விரும்புகிற எவனுக்கும் ஞானஸ்நானம் கொடுக்கப்படவேண்டும். அப்படியே கிறிஸ்தவ குடும்பங்களில் வளர்க்கப்படும் குழந்தைகளுக்கும் ஞானஸ்நானம் கொடுக்கப்படவேண்டும், ஏனென்றால் அவர்கள் கடவுளின் பிள்ளைகளாவது தேவையாயிருப்பதோடு கடவுளின் வாக்கைக் கேட்பார்களே.

## II. செஞ்சிலுவை சங்கம்

நாளது 1939ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 22ம் தேதி இம்மாகாணத்திலுள்ள நாமும், இன்னும் 72 நாடுகளில் உள்ளவர்களும் இச்சங்கத்தின் 75வது வருஷ விழாவைக் கொண்டாட முயற்சி செய்துவருகிறார்கள்.

1864ம்-ஆு ஆகஸ்டு மீ 22உ செஞ்சிலுவை சங்கம் ஜனனம் ஆயிற்று. ஆஸ்திரியர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் 1859ம் வருஷம் நடந்த சண்டை 15 மணி நேரம்தான் என்றும், அதில் கொல்லப்பட்டவர்கள், குற்றுயிராக்கப்பட்டவர்கள் சுமார் 40,000. இவர்களில் போதுமான மருந்து வசதியின்மையாலேயே இறந்தவர்கள் எத்தனையோ பேர்! இந்தக் கோரத்தையெல்லாம் கண்ணால் காணச்சகியாத ஸ்விட்ஜர்லாந்துவாசி ஹென்றி டுனன்ட் என்பவர், யுத்தகளத்தில் காயமடை

யும் போர்வீரர்களுக்கு வைத்திய வசதிகள் அளிக்க செஞ்சிலுவைச் சங்கம் என்ற ஸ்தாபனம் 1864ல் எல்லா தேசங்களும் ஜினிவாவில் கூடி ஏற்படும்படி செய்தார்.

செஞ்சிலுவைச் சங்கம் இப்பரந்த பூமி முழுவதுக்கும் சொந்தம். தேசம், மதம், ஜாதி, ஆண், பெண் முதலிய எந்த வித்தியாசமுமின்றி வேலை செய்கிறார்கள். செஞ்சிலுவை என்ற அடையாளம், சிலுவை என்ற காரணத்துக்காக எடுத்துக் கொள்ளவில்லை. ஸ்விட்ஜர்லாந்து தேசத்தின் கொடி, சிகப்பு வர்ணத்தின்மீது வெள்ளைச் சிலுவை உண்டு. அத்தேசத்தில் இந்த ஸ்தாபனம் ஏற்பட்டபடியால், அவர்கள் கொடியை மாற்றி "வெள்ளை வர்ணத்தின்மீது செஞ்சிலுவை"யை அடையாளமாகக் கொண்டார்கள்.

சென்ற யுத்தத்தில், இச்சங்கம் காயமடைந்தவர்களுக்கு வைத்தியம்செய்து, சிறைப்பட்டவர்களுக்கு அன்னமளித்து, கைகால் ஒடிந்தவர்களை தங்கள் சொந்த தேசத்துக்கு அனுப்பியது. பின்னால் வரவர, இச்சங்கம் யுத்த காலத்தில் மாத்திரம் அல்ல, சமாதான காலத்திலும் சேவைசெய்ய ஏற்பாடாகி, பொது ஜன சமாதானத்துக்காகவும், வியாதிகளைத் தடுப்பதற்காகவும், உலகத்தில் நேரிடும் கஷ்டங்களுக்கு நிவாரணம்செய்யவும் முன்நிற்பதைக் காண்கிறோம். பஞ்சங்களினால் பீடிக்கப்படுபவர்க்கும், பூகம்பம் முதலிய விபத்தில் தவிர்ப்பவர்க்கும், அங்கங்கே ஏற்படும் புசல் சேதம், பெருவெள்ள அழிவு இவைகளில் உதவிபுரியவும் பார்க்கிறோம். கர்ப்ப ஸ்திரீகள், சிசுக்கள் முதலியவர்களைப் பராமரிக்கவும், வியாதியைத் தடுப்பதைப்பற்றிப் பொது ஜனங்களுக்குப் பிரசாரம்செய்து, அதனால் ஜனங்கள் முன்னைவிட அதிக ஆரோக்கியமாகவும், சந்தோஷமாகவும் இருக்கச் செய்யவும் இச்சங்கம் தினந்தோறும் சுறுசுறுப்பாக உழைத்து வருகிறது. பஞ்சத்தில் தவிப்பவர்களுக்கு, மோட்டார் லாரிகளில் தானிய வகைகளை எடுத்துக்கொண்டு, முக்கியமாக, செங்கல்பட்டு, கோயம்புத்தூர் ஜில்லாக்களில் அநேகாயிரம் சிறுவர் சிறுமிகளுக்கு தினத்துக்கு ஒருவேளை உணவு கொடுத்து உதவுவதையும் அறிவோம்.

இந்த சங்கத்தில் ஊக்கம் எடுத்து உழைப்பவர்கள் அதிகமாக ஐரோப்பியர்கள்தான் என்று தோன்றுகிறது. இந்தியர்கள் அதிகமாக இந்த நல்ல காரியத்தில் சீக்கிரம் தங்கள் உத்தரவாத பணிவிடையை ஏற்று நடத்த முன்வருவதை எதிர்பார்க்கிறோம். பல வேலைகளையும் நடத்த பணமும் அநேக உபகரணங்களும் அதிகம் வேண்டும். ஆகவே, ஜாதி, மதம், அரசியல் கொள்கை முதலிய எந்த வித்தியாசமும் பாராட்டாமல் இச்சங்



கத்தை எல்லாரும் ஆதரிக்க, ஒரு விண்ணப்பம், சென்னை கிளைச் சங்கத்துக்கு தலைவியாக விளங்கும் மாகாண கவர்னரின் மனைவியான லேடி மார்ஜரி எர்ஸ்கின் பெருமாட்டியும் விடுத்துள்ளார். சகல கிறிஸ்தவர்களும் இச்சங்கத்திற்கு ஆதரவு அளிப்பது "எனக்கே இதைச் செய்தீர்கள்" என்பவருக்கே செய்ததாகும். [ஆனந்த விகடனைத் தழுவி எழுதியது. பத்.]

## III. செய்திகள்.

**Mr. E. Andersen**: பண்ணுருட்டி கைத் தொழிற்சாலை மானேஜர் கனம் ஆண்டர்சன் துரையும் அம்மாளும் அடுத்த மாத மத்தியில் திரும்பி வந்து பண்ணுருட்டி வேலையை ஒப்புக் கொள்வார்கள். அவருடைய ஸ்தானத்திலிருந்து வேலை பார்த்து வரும் கனம் தேவதாஸ் ஐயரவர்கள் சைகிள் வண்டியிலிருந்து விழுந்த காயத்தினால் சென்னையில் சிகிச்சை பெற்று சுகமடைந்து வருவதாகக் கேள்விப்படுகிறோம். கனம் ஆண்டர்சன் துரை வருவது எல்லாருக்கும் நிறை சந்தோஷமே.

**Rev. Franklin**: விருத்தாசலம் மிஷன் உபாத்திமார்களுக்கும் இதர ஊழியருக்கும் ஜூன் 28௳ முதல் ஜூலை 4௳ வரையில் ஓய்வு நாள் பள்ளிக்கூட பண்டிதர் கனம் பிராங்கிளின் ஐயர், வேதபாடம் கற்பிக்கும் முறை, மாதிரி பாடங்களைக் காட்டி கற்பித்துக் கொடுத்தார்.

**Darisanapuram Women's Bible School**: பெண்களின் வேத பயிற்சி சாலை ஜூலை 15௳ கனம் வாக்கர் அம்மாள் ஆரம்ப பிரசங்கத்தோடும், 16௳ காலை கர்த்தருடைய விருந்தின் ஆராதனையுடனும் அன்று மாலை கனம் ஞான வேதக்கண் போதகர் "கிறிஸ்துவைத் தரிசித்தல்" என்பதின்பேரில் பிரசங்கத்துடனும் ஜெபத்துடனும் ஆரம்பிக்கப்பட்டது. 23 பெண்கள் அவைகளிலிருந்து வந்திருக்கின்றனர். கனம் விசுவாசம் அம்மாள் இப்பாடசாலை தலைமை வகித்து, கனம் பார்டன்பிளத் அம்மாள் நவம்பர் மத்தியில் திரும்புகிற வரையில் தலைமை வகித்து நடத்தி வருவார்கள்.

**Dedication of Kattumailur Chapel**: விருத்தாசலம் மேற்கு வட்டகையிலுள்ள காட்டுமைலூரில், கனம் டாக்டர் லூக்காஸ் அவர்களும் அம்மாளுமாக சேர்ந்து தங்களது சொந்த செலவில் ஒரு விஸ்தீரண அழகிய ஆலயம் கட்டியிருக்கிறார்கள். இவ்வாலயம் நமது பிரசிடென்ட் கனம் ஐபர்க் ஐயரவர்களால் செப்ற். 3௳ பிரதிஷ்டை செய்யப்படும்.

**Obituary**—மரணம்.

**S. Thomas Christian:** திருவண்ணாமலை உயர்தரப் பாடசாலையில் அநேக வருஷங்களாக உபாத்தியாயராக இருந்து நீங்கிய ஸ்ரீ J. சீனிவாசகம் அவர்களுடைய இளைய குமாரர் தாமஸ் கிறிஸ்டியன் 1939, மேமீ 14உ மிராஜ் ஆஸ்பத்திரியில் சயரோகத்தில் பீடிக்கப்பட்டபின், கர்த்தருடைய ராஜ்யத்தில் பிரவேசித்தார். இவர் 1912, டிச. 12உ பிறந்து, திருவண்ணாமலை பாடசாலையில் தேறி, ஆசிரியப் பயிற்சி பெற்று அதே பாடசாலையில் மூன்று வருஷத்துக்கு மேலாய் உழைத்து வந்தார். ஒரு சிறந்த வாலிபன். நற்பழக்கமும் கிறிஸ்தவ லட்சணங்களும் பொருந்தி, சுறுசுறுப்பும் புத்திக்கூர்மையுமுள்ளவர். பெற்றோரைப்போலவே அமைதியும் சகலரின் மதிப்பும் பெற்று, மற்றவர்களுடைய நம்பிக்கைக்கு உண்மையாய் ஜீவித்து சாட்சியாயிருந்தார். பலயீன நிலைமையில் இருக்கும் இவரது தகப்பனாருக்கும் கூடப்பிறந்த சகோதரன் சகோதரி இவர்களுக்கும் ஆறுதலை ஆண்டவர் அளிப்பாராக.

**Albert E. Lite:** 1939௵ ஆகஸ்டுமீ 9உ பிற்பகல் 4-45 மணிக்கு கபவாத சுரத்தால் ஸ்ரீமான் ஆல்பர்ட் லைட் என்னும் பெரியார் சென்னையில் மரித்து, 11உ காலை கீழ்பாக்கம் கல்லறைத் தோட்டத்தில் கனம் V. E. மாணிக்கம் ஐயரவர்களால் அடக்கஞ் செய்யப்பட்டார். இவர் விட்டுப்போகும் ஆறு குமாரர், ஒரு குமாரத்தி இவர்களுக்கு ஆண்டவர் தமது வாக்கின்படி தாயும் தகப்பனுமாக ஆதரவு அளிப்பாராக. ஸ்ரீமான் லைட் ஒரு சங்கீத அபிமானி, வித்வான். காலஞ்சென்ற ஸ்ரீ ஜோனாஸ் என்பவரின் குமாரர். இவர் வயலின், ஜலதிரங்கம் கருவிகளில் பாண்டித்யமுடையவர். சென்னை சங்கீத கச்சேரிகளில் இவரைக் காணலாம். நமது தமிழ் கீர்த்தனைகளில் சில பாட்டுகளுக்கு தியாகராஜ கீர்த்தனங்கள்போன்ற ராகங்களை அமைத்து சபைகளில் பாடும்படி செய்துவந்தார். திருவண்ணாமலையில் 1923௵ இவர் தங்கியபோது வாலிபருக்கு அநேக பாடல்களைக் கற்பித்து சங்கீத ஆராதனை நடத்த ஊன்றுகோலாய் இருந்தார். இவர் தமது பிள்ளைகளை நல்ல கிறிஸ்தவ குணத்திலும் நடத்தையிலும் வளர்த்திருக்கிறார். அமைதியும், சாந்தமும் நிறைந்தவர். சர்க்கார் Dead Letter Officeயில் வேலை செய்து நீங்கி, சில வருஷங்களாக ஓய்ந்திருந்தார்.

**Rev. G. Y. Tucker:** 1939௵ ஆகஸ்டுமீ 14உ விடியற்காலை 3-45 மணிக்கு, கூடலூர் கனம் ஞானையா ஏசடியான் டக்கர் ஐயரவர்கள் பரம வாசஸ்தலத்திற்குச் சென்றனர். ஒரு மாதகாலமாக வியாதியில் அதிக சகிப்பு, அமைதி, நம்பிக்கை, ஜெப வாஞ்சை, ஊழிய சிரத்தை, இவைகளையே மற்றவர்

காணும்படிச் செய்து, தமது பிள்ளைகள், இரு குமாரர், ஐந்து குமாரத்திகள் இவர்களுடைய அன்பின் உதவியை கடைசி நாட்களில் ஏற்றுக்கொண்டு சமாதானத்துடனும் சந்தோஷத்துடனும் இவ்வுலகைவிட்டு நீங்கினர். இவர்கள் 25 வருஷமாக கூடலூர் ஓல்டு டவுன் S. P. G. பாடசாலை தலைமை ஆசிரியராகவும் 9 வருஷம் தஞ்சாவூர் சபைப் போதகராகவும், 6 வருஷம் திருச்சி சபைப் போதகராகவும் 4 வருஷம் பங்களூர் சபைப் போதகராகவும், கடந்த மூன்று வருஷம் கூடலூர் சபைப் போதகராகவும் இருந்தார். இவர் கூடலூரில் டேனிஷ் சபைக்கும் எஸ். பி. ஜி. சபைக்கும் ஒத்துழைப்பையும், ஐக்கிய பணிவிடையையும் அதிகமாக மேலிடச்செய்து, சுவிசேஷ ஊழியம், எழுப்புதல் கூட்டம் இவைகளில் ஒன்றுசேர்ந்து நடக்கும்படியே முயற்சிசெய்துவந்தார். சபையைப் பலப்படுத்தவும், சபை சாட்சிகொடுக்கும் நிலையில் காத்துக்கொள்ளவும், சுவிசேஷ ஊழியத்தில் சபை ஈடுபடச் செய்யவும் ஊக்கமாயிருந்தார்.

அடக்க ஆராதனை ஆலயத்தில் கனம் P. S. மாசில்லாமணி ஐயர் நடத்த, கனம் ஞானவேதக்கண் போதகர் 2 ராஜா 2. 12. எலியா மறைந்த சமயத்தில் எலிசா புலம்பியதை எடுத்துக் காட்டி, காலஞ்சென்ற ஐயர் எப்படி சபைக்குத் தகப்பனாகவும், போதக பணிவிடையில் தளகர்த்தனாகவும், சிறந்த வீரனாகவும் முன்னின்று நடத்துகிறவராகவும் இருந்தார் என்று எடுத்துக்காட்டி, பரம ராஜ்யத்தில் அவருடைய தொடர்ச்சியான பலிபீட ஆசாரிய பணிவிடையைப் பற்றியும் உயிர்த்தெழுதலின் நிச்சயத்தைப்பற்றியும் பிரசங்கித்தார். ஆராதனை முடிவில், இந்திய சங்கீத கோஷ்டியுடன் கல்லறைத் தோட்டத்திற்குத் தொண்டர்கள் பெட்டியைச் சுமந்து சென்றனர். கனம் S. A. இஸ்ரவேல் ஐயர் கல்லறைத் தோட்ட அடக்க ஆராதனை நடத்திவைத்தார். இக் குடும்பத்தாருக்கும் கூடலூர் சபைக்கும் ஆண்டவர் புது பலம் தருவாராக. இவரது துக்க நிவிர்த்திக்கூட்டம் 19௳ மாலை கனம் ஞானவேதக்கண் போதகர் தலைமையில் நடந்தது.

**Rev. T. P. Gopalaswami, N. M. S. Missionary:** சுதேச மிஷனெரி சங்கத்தின் மிஷனெரியார் கனம் T. P. கோபாலசாமி ஐயர் விருத்தாசலத்தில் செப்ற். 11௳யிலும், 12, 13௳களில் கூடலூரிலும், 13௳. தரங்கன்பாடியிலும், அதன்பின் தஞ்சை, திருச்சி இடங்களில் சங்க சுவிசேஷ வேலையைப்பற்றி பேசும்படி சுற்றுப் பயணம் செய்வார். சபைத் தலைவர்களும் சபையாரும் ஏற்றுக் கொள்ளவும்,

N. M. S. ஞாயிறு. அக்டோபர்மீ 8உ சுதேச மிஷனேரி சங்கத்திற்காக வருஷாந்தர ஜெபதினம் அக்டோபர்மீ 8 தேதி கொண்டாடப்படும். இது சம்பந்தமான பத்திரிகைகளை "N. M. S. House, Royapettah, Madras" க்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

**Bangalore College Extension Course:** வழக்கம்போல் இவ்வருஷத்திலும் கலாசாலையில் பயிற்சி வெளியிலுள்ளவர்களுக்கு சில விசேஷித்த உபந்நியாசங்களை செப்ற். 12 முதல் 21 வரையில் ஒழுங்கு செய்திருக்கின்றனர். பிரபல உபந்நியாசகர்கள் வருவார்கள். திருச்சபையின் வளர்ச்சியைப்பற்றி அதிகமாய் ஆலோசிக்கப்படும். உபந்நியாசம் இங்கிலீஷில் நடக்கும். இங்கிலீஷ் அறிந்தவர்கள் தாங்கள் வருவதை முன்னதாகத் தெரிவித்துக்கொண்டால் பயண உதவி கலாசாலை அதிகாரிகள் சிலருக்கு கொடுப்பார்கள்.

———:———

**World's Sunday School Day.**

Sunday, 17th September, is World's Sunday School Day. It is suggested that pastors and others may use the opportunity for special children's services, addresses and sermons urging the demand for voluntary service in the Sunday School, and in other ways bringing the work amongst children especially before the notice of the churches.

The India Sunday School Union has prepared a special order of worship, with a pageant, for use in children's services ou this day. Copies may be obtained at one anna each, 8 annas per dozen from the I. S. S. U., Coonoor, Nilgiris.

———:———

## 75ம் வயது பூர்த்தி

ஜெர்மன் தேசத்திலிருக்கும் சிரேஷ்டர் சங். Th. Meyner ஐயர் (விலாசம் :—Dresden A. I., Schaufussstrasse 18: II) வருகிற அக்டோர்மீ 8உ தமது 75ம் வயதை முடிப்பார். அத்தினத்தில் தமிழ் சிநேகிதரின் வாழ்த்துதல்கள் அவருக்குப் போய்ச்சேர அவரது சிநேகிதர் ஏற்பாடு செய்வார்களென நம்புகிறோம்.

அரு. பத்.

———:———

மறதி: அருணோதய சந்தாதாரில் பலர் தங்கள் சந்தாத் தொகையை அனுப்ப மறந்திருப்பதாகத் தோன்றுகிறது. தயவு செய்து சீக்கிரம் அனுப்பவும்.

அரு. பத்.

